22nd September 1961]

*Black-marketing case—*

Salem—Stocks which were confiscated were ordered to be released on appeal which ended in acquittal.

* 1728 *Q.*—SRI V. K. KOTHANDARAMAN : கனம் உள்துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) உரத்தில் கலப்படம் விஷயமாக புகார்கள் ஏதேனும் வந்துள்ளதா ?

(இ) இது விஷயமாக என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டது ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) Yes, Sir. Fifteen cases have been detected from 1957 to 1960.

(*b*) Prosecutions were launched in these cases after investigation The present position of the cases is indicated below :—

*Tiruchirappalli district.*—Ten cases were detected. In seven cases the dealers were acquitted and in three cases they were convicted as follows :—

(i) Stocks confiscated, with fine of Rs. 300.
(ii) Simple imprisonment for one month ; and
(iii) Imposition of fine of Rs. 100.

*Tirunelveli district.*—One case was detected. The dealer was fined Rs. 40 and the stocks were confiscated.

*South Arcot district.*—Four cases were detected and the cases are pending in the court.

SRI V. K. KOTHANDARAMAN : கனம் அமைச்சர் அவர்கள் போன மாதம் ஒரு கூட்டத்தில் பேசும்பொழுது நம்முடைய நாட்டிலிருந்து ஏற்றுமதி செய்யப்படுகிற ஏல அரிசியில் எலிப்புழுக்கையும், பிரும்மதாண்டி விதையும் கலப்படம் செய்யப்பட்டு ஏற்றுமதி செய்யப்படுவதால் நம்முடைய நாட்டைப் பற்றி கேவலமாக நினைப்பார்கள், அப்பேர்ப்பட்டவர்கள் மீது கடுமையான நடவடிக்கை எடுக்க வேண்டும் என்று சொன்னூர்கள். அதே போல, உணவிலே 'பாய்ஸன்' கலப்படம் செய்தால், அவர்கள் பேரில் கொலைக் கேஸ் வழக்கு தொடரப்படுகிறது. உரம் எல்லாவற்றையும்விட முக்கியமான பொருள். லட்சக்கணக்கான பேர்களுக்கு உணவு உற்பத்தி செய்வதற்கு உதவக்கூடிய பொருள். அதில் கலப்படம் செய்வது என்பது நிலத்திற்கே விஷம் வைப்பது மாதிரியாகும். ஆகவே, இது போன்ற விஷயங்களிலே கடுமையான நடவடிக்கை எடுப்பதற்கு கனம் அமைச்சர் அவர்கள் ஏற்பாடு செய்வார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இதிலே தவறு செய்கிறவர்கள் மீது கண்டிப்பான நடவடிக்கை எடுத்துக்கொள்ளப்படும். ஆனால், தண்டனை கொடுப்பது கோர்ட்டார். கோர்ட்டார் சட்டப்படி தண்டனை கொடுக்கிறார்கள்.

SRI M. KALYANASUNDARAM : ரூ. 100 அல்லது 300 அபராதம் கொடுப்பதினாலே இவர்களுக்கு இருக்கக்கூடிய தைரியம் குறைந்து விடாது. இம்மாதிரி அபராதம் கொடுப்பது அவர்களுக்கு ரொம்ப சாதாரண விஷயம். சம்பாதிக்கிற அனுகூலத்தைப் பார்க்கிறபொழுது, அபராதத்தைக் கொடுத்துவிட்டு எவ்வளவு வேண்டுமானாலும் செய்யலாம் என்கிற ஊக்கம்தான் ஏற்படும். இம்மாதிரி விஷயங்களில் சிறை தண்டனை இருக்க வேண்டுமென்ற அளவுக்கு சட்டத்தை திருத்துவார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : கட்டாயம் சிறை தண்டனை இருக்க வேண்டுமென்றால், அதாவது, 'மினிமம் பனிஷ்மெண்டு' சட்டத்தில் விதிக்க வேண்டும். மது விலக்கு சட்டத்தை அம்மாதிரி திருத்தி அமைத்திருக்கிறோம். எல்லா சட்டத்தையும் அப்படி மாற்றுவது உசிதம் அல்ல,

[22nd September 1961

சட்டத்தைத் திருத்துவதற்கு அவசியமிருந்தால் அது பற்றி யோசிக்க வேண்டும். கோர்ட்டார் ரொம்ப தாராளமாக நடந்துகொண்டிருக்கிறார்கள். கோர்ட்டார் தண்டனை கொடுத்தாலும், கொடுக்காவிட்டாலும், உடனே லைசென்சு ரத்து செய்யப்படுகிறது.

DEPUTY SPEAKER : There are half a dozen more questions. We shall take five more minutes and dispose of them. I think the House agrees to it.

SRI M. KALYANASUNDARAM : திருச்சியில் எழு வழக்குகளில் விடுதலையடைந்திருக்கிறார்கள் என்று சொன்னார்கள். அந்த வழக்குகளில் அப்பீல் உண்டா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM ; அது சம்பந்தமான விவரம் என்னிடம் இப்பொழுது இல்லை. அப்பீல் என்றால் அது பப்ளிக் பிராஸிகூடரைக் கேட்டு அதன்மேல் செய்ய வேண்டும். எல்லாத்துக்கும் அப்பீல் செய்ய முடியாது.

DEPUTY SPEAKER : We have got about six more questions. I am not going to allow any more supplementaries on this question.

SRI V. K. KOTHANDARAMAN : ஸார், இது ஒரு முக்கியமான கேள்வி. இதில் இன்னும் ஒரே ஒரு உப கேள்வி அனுமதிக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

DEPUTY SPEAKER : I have given the hon. Member a chance many times. I shall take up the next question.

### *Capital punishment—Abolition of*

* 1729 Q.—SRI A. A. RASHEED : Will the Hon. the Minister for Home be pleased to state whether there is any proposal to abolish death sentence in the State?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : No, Sir.

SRI A. A. RASHEED : May I know the reason for arriving at such a decision?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : In spite of the provision for capital sentence and in spite of so many people being hanged, there are 9,000 murders in India and there are more than 700 murders in this State. Of course, people, are afraid of death and even after the award of capital sentence and after the disposal of their appeals in the highest courts, they apply for mercy, but still murders are being committed. But for this capital sentence, I have no doubt that there will be many more murders.

### *Agricultural Exhibition*

* 1730 Q.—SRI S. M. ANNAMALAI (on behalf of SRI M. P. SARATHI) : கனம் உள்துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

விவசாய நிரந்தரப் பொருட்காட்சி ஒன்று இந்த ராஜ்யத்தில் ஏற் படுத்த உத்தேசம் உண்டா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Yes, Sir. There is a proposal to set up a permanent Agricultural Exhibition at the Agricultural College and Research Institute, Coimbatore. The matter is under examination.